ணையமுன்னிட்டுக்கொண்டு (விவாஹமண்டபத்திற்கு) வந்தார்கள். அந்தஸ்த்ரீகள் அழகிய பருத்தஅங்கங்களுள்ளவர்களும் மெருகிடப்பட்ட ரத்னகுண்டலங்கள்ணிந்தவர்களும் சிறந்தகாந்தியுள்ளவர்களும் சிறந்தரூபமுடையவர்களும் நன்குஅலங்கரிக்கப்பட்டவர்களுமாயிருந்தார்கள். எல்லாஸ்த்ரீகளுள்ளும் க்ருஷ்ணையானவள் ரூபத்தாலும் தேஹத்தாலும் சிறந்து விளங்கினாள். (அந்தஸ்த்ரீகள்யாவரும்) புகழத்தக்கவளும் அலங்கரிக்கப்பட்டவளும் ராஜபுத்ரியும் மஹேந்த்ரனுடையபுத்ரிபோன்றவளுமான உத்தரையைமுன்னிட்டுச்சூழ்ந்துகொண்டு (விவாஹமண்டபத்தில்) நின்றார்கள். ஸேனாபதியான விராடன் ஜலம்நிறைந்த பொற்குண்டிகையையெடுத்து, கருநெய்தல்போன்ற கண்ணையுடையவளான புத்ரியை அர்ஜுனனுடையகையில் மருமகளாகஏற்றுக்கொள்வதற்காக விரைவாகத் தாரைவார்த்தான். சிறந்தமனமுள்ள குந்தீபுத்ரன் (தன்)புத்ரனுக்காக அந்தப்பெண்ணைப் பெற்றுக்கொண்டான். தோஷமற்றஅங்கங்களுள்ளவனும் ஸுபத்ரையின்குமாரனுமான அபிமன்யுவும் அப்பொழுது இந்த்ரனுடைய ரூபத்தைத்தரித்து விராடனுடையபுத்ரியான உத்தரையைப் பாணிக்ரஹணம்செய்துகொண்டு அந்தவிவாஹமண்டபத்தில்நின்றான். குந்தீபுத்ரரானயுதிஷ்டிரர் அந்தஉத்தரையை மருமகளாகஅங்கீகரித்தார். விதிப்படி யாகம்செய்தவர்களும் ஏராளமாக (ப்ராம்மணர்களுக்குத்) தக்ஷிணைகொடுத்தவர்களுமான த்ருபதன், விராடன், மஹாபலசாலியான சிகண்டி, யுயுதானன், சைபயன், த்ருஷ்டத்யும்னன், ஸாத்யகி இந்த ஏழுஅக்ஷௌஹிணீபாலர்களும் பாண்டுபுத்ரரான யுதிஷ்டிரரைச் சூழ்ந்துகொண்டு அப்பொழுது விவாஹத்தைநடத்தினார்கள். ஸேனையும் அந்தவிவாஹமண்டபத்தில் (ஸந்நத்தமாக) இருக்கும்ஸமயத்தில் தார்மிகர்களுள் உத்தமனானமத்ஸ்யராஜன் ப்ரீதியுள்ளவனாகி(த் தன்)பெண்ணைப்பிடித்து அபிமன்யுவுக்குக் கொடுத்தான். பார்த்தன், உத்தரையைப்பெற்றுக்கொண்டு ஜனார்த்தனனைமுன்னிட்டு மஹாத்மாவான ஸுபத்ராபுத்ரனுக்கு விவாஹத்தைச்செய்வித்தான். பிறகு, எல்லாச்சிறப்புகளுடனும் மிக்கவைபவத்துடனும்கூடிய விவாஹமானது வ்ருத்தியடைந்தது. அப்பொழுது உம்முடையபிதாவுக்குப்பிதாவும் ஸுபத்ரையினுடையபுத்ரனுமான அபிமன்யுவுக்குநடந்தவிவாஹகார்யமானது, ஆச்சர்யமாகஇருந்தது. தௌம்யர், சிஷ்யர்களால்சூழப்பெற்றுச் சாஸ்த்ரமுறைப்படி அக்னியில் ஹோமம்செய்தார். ஸுபத்ராபுத்ரன் அக்னியைப்ரதக்ஷிணம்செய்து (உத்தரையைப்) பாணிக்ரஹணம்செய்தான். பிறகு, மாத்ஸ்யர்களுக்குப் பதி

யான விராடராஜன் ஸந்தோஷமடைந்து [1]பார்த்தனுடையபுத்ரனை அந்தஅபிமன்யுவின்பொருட்டு அப்பொழுது ஏராளமான தனத்தையும் காற்றுப்போன்ற வேகமுள்ள லக்ஷம்குதிரைகளையும் முக்யமான இருநூறுயானைகளையும் பலவிதமான பொருள்களையும் ஸந்தோஷத்துடன் சிறந்தவரிசையாகக் கொடுத்தான். மத்ஸ்யராஜன் குந்திபுத்ரர்களின்பொருட்டுக் காணிக்கையையும் கொடுத்தான். குந்திபுத்ரர் க்ருஷ்ணனோடு ஏராளமான (பொருள்களைப்) பெற்றுக்கொண்டார். தர்மபுத்ரரான அவர், அப்பொழுது விவாஹமானவுடன் ஸ்ரீக்ருஷ்ணன்கொண்டுவந்த தனத்தையும் ஆயிரம்பசுக்களையும் வஸ்த்ரங்களையும் பற்பலவிதமான ரத்னங்களையும் எல்லாப்பூஷணங்களையும் வாஹனங்களையும் படுக்கைகளையும் ப்ராம்மணர்களுக்குக் கொடுத்தார். அவர் நகரவாஸிகளான ஜனங்களை ப்ரீதியடையக்கூடிய சிறந்தபொருள்களால் த்ருப்தியடையச்செய்தார். ஓ! பாரதச்ரேஷ்டரே! (எல்லா) மஹோத்ஸவங்களுக்கும் உபமானமாயிருக்கின்ற அந்தமத்ஸ்யராஜனுடைய நகரமானது ஸந்தோஷமுள்ளவர்களும் புஷ்டியுள்ளவர்களுமான ஜனங்களால் நிறைந்துவிளங்கியது. நிறைந்த செல்வமுள்ள விராடராஜன், தன்புத்ரியான அந்த உத்தரையை ஸுபத்ராபுத்ரனை அபிமன்யுவுக்குக்கொடுத்து, புரோஹிதர்களோடும் மந்த்ரிகளோடும் பட்டணத்துஜனங்களோடும் தேசவாஸிகளான ஜனங்களுடனும், அப்பொழுது பரமானந்தத்தை அனுபவித்தான்" என்றுகூறினார்.

ஜனமேஜயர், "(வைசம்பாயனரே!) விவாஹம்நிறைவேறியவுடன் ஸந்தோஷமுள்ள மனத்தையுடையவரான யுதிஷ்டிரர் என்ன சொன்னாரென்பதையும் பார்த்தர்கள அதற்குமேல் என்னசெய்தார்களென்பதையும் முழுதும் (எனக்கு) இப்பொழுது உரைப்பீராக" என்றுவினவினார்.

வைவாஹிகபர்வம் முற்றிற்று.

---

# விராடபர்வம் முற்றிற்று.

---

[1] மூலத்தில், 'பார்த்தாய' என்றிருக்கிறது.